நெ. 56. சங்கர கிரந்தாவலி நெ. 8.

உ

ஓம்தத்ஸத் பரப்பிரஹ்மணேநம:

ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகளால் அருளிச்செய்த

# ॥ आत्मानात्म विवेकः ॥

தஞ்சை, ஸ்ரீலஸ்ரீ
பிரஹ்மாநந்தஸ்வாமிகளால்
மொழிபெயர்க்கப்பட்டு

தஞ்சை பண்டிட்
S. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகளால்
பார்வையிடப்பட்டு

ஷை மந்திரம் மானேஜிங் டிரஸ்டி,
சூ. பாக்கியம் பிள்ளை அவர்களால்.

தஞ்சை, ஸ்ரீ சங்கரவிலாச சாரதாமந்திர பிரஸில்
பதிப்பிக்கப்பட்டது.



கலி ௫௦௩௪ ஸ்ரீமுக-ளு மார்கழி-மீ

விலை] 1933. [அணா 4.



ஸ்ரீ ஜகத்குரு ஆதிசங்கராசார்யஸ்வாமிகள்.

கும்பகோணம் ஸ்ரீ கஞ்சி காமகோடி
பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு
ஸ்ரீ சங்கரபகவத் பாதாசார்யாள்

# ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அநுக்கிரகம்

பின்வருமாறு.

॥ श्री ॥

॥ श्रीचंद्रमौळीश्वर ॥

स्वस्ति श्रीमदखिलमंडलालंकारत्रयस्त्रिंशत्कोटिदेवतासे-
वितश्रीकामाक्षिदेवीसनाथ श्रीमदेकाम्रनाथ श्रीमहादेविसनाथ
श्रीहस्तिगिरिनाथसाक्षात्कारपरमाधिष्ठानसत्यव्रतनामांकित-
काञ्चीदिव्यक्षेत्रे शारदामठसुस्थितानाम्, अतुलितसुधारस,
माधुर्यकमलासनकामिनीधम्मिल्लसंफुल्लमल्लिकामालिकानिष्य-
न्दमकरदझरी सेवास्तिक वाङ्निगुंभविजृंभणानन्दतुन्दिलि-
तमनीषिमंडलानाम्, अनवरताद्वैत्रविद्याविनोदरसिकानाम्,
निरेन्तरालंकृतीकृतशान्तिदान्तभूम्नाम्, सकल भुवनचक्र प्र-
तिष्ठापकश्रीचक्रप्रतिष्ठाविख्यातयशोलंकृतानाम्, निखिलपा-
षंडषंडकण्टकोद्धाटनेन विशदीकृतवेदवेदान्तमार्गषण्मतप्रति-
ष्ठापकाचार्याणाम्, श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीजग-
द्गुरु श्रीमच्छंकरभगवत्पादाचार्याणाम्, अधिष्ठान सिंहास-
नाभिषिक्त श्रीमहादेवेन्द्रसरस्वतीसंयमीन्द्राणाम्, अन्तेवा-
सिवर्या श्रीमच्चन्द्रशेखरेन्द्रसरस्वती श्रीपादैः ॥

தஞ்சாவூர் ஸ்ரீ சங்கரவிலாஸ சாரதா மந்திரத்தின் தர்மகர்த்தக்களான மஹாதேவ காண்டிகேராவ், நாகாஸ்வாமிராவ், மு. ஆறுமுகம்பிள்ளை, சு. பாக்கியம் பிள்ளை. இவர்களுக்கு ஸர்வாபீஷ்டங்களும் ஸித்திக்குமாறு நாராயணஸ்மரணை.

(தஞ்சை ஸ்ரீ பிரஹ்மாநந்த சுவாமிகளால் ஸ்தாபிக்கப்பெற்ற) ஸ்ரீ சங்கரவிலாச சாரதாமந்திரத்தின் முக்கிய நோக்கங்களான பலதர்மகைங்கரியங்களை நீங்கள் மிக்க ஊக்கத்துடன் நடத்திவருவதைக்குறித்தும் ஸ்ரீமத் ஆசாரிய பகவத்பாதாளிடத்தில் உங்களுக்கிருக்கும் அந்தரங்கபக்தியைக் குறித்தும் மிகவும் சந்தோஷிக்கிறோம். இவ்விதமே நீங்கள் ஸத்காரியங்களைச் செய்துகொண்டு ஸ்ரீபரமாசாரியபூரண கிருபாபாத்திரர்களாய் உத்தரோத்தர சிரேயஸ்களை அடையவேண்டியது.

முகாம்:—
சின்னத்திப்பசமுத்திரம்
ஸ்ரீமுக வருஷ ஐப்பசி மீ
24-ந் தேதி

நாராயணஸ்மரணை.

நூலாசிரியர்:—

## ஸ்ரீ பிரஹ்மாநந்த ஸ்வாமிகள்.



ச்ச்சிதாநந்த மெங்குந்தளைத்து நிற்பதனைக் காட்ட
இச்சையா லெம்மனோற்கு வெழில்குருவாகத் தோன்றி
உச்சமாய் ஞானநூற்க டொகுத்தன னதிலீதொன்று
மெச்சமயத் தார்நோக்கி னின்பமு மளிக்குநன்றே.





ஓம் தத்ஸத் ப்ரஹ்மணே நம:

# ॥ आत्मानात्मविवेकः ॥

## ஆத்மாநாத்ம விவேகம்.

दृश्यं सर्वमनात्मा स्याद्दृगेवात्मा विवेकिनः ।
आत्मानात्मविवेकोऽयं कथितो ग्रन्थकोटिभिः ॥ १ ॥

விவேகிகளுக்குத் திருசியம் (காணப்படுவது)யாவும் அநாத்மா திருக்கே(காண்பதே) ஆத்மா. இவ்வாத்மாநாத்மவிவேகம் கோடிக்கணக்கான கிரந்தங்களால் சொல்லப்பட்டுளது.

आत्मानात्मविवेकः कथ्यते ।

ஆத்மாநாத்மவிவேகம் சொல்லப்படுகின்றது.

आत्मनः किंनिमित्तं दुःखम् ? शरीरपरिग्रहनिमित्तम् ।
"नेह वै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहातिरस्ति" इति श्रुतेः।

ஆத்மாவுக்கு எந்நிமித்தமாகத் துக்கம்? சரீரத்தைக்கொள்ளுதல் நிமித்தம் துக்கம்; "இங்குச் சரீரத்தோடுள்ள சத்திற்குப் பிரியாப் பிரியங்களிரண்டன் நீக்கமில்லை" என்னும் சுருதியினால்.

शरीरपरिग्रहः केन भवति ? कर्मणा ।

சரீரத்தைக் கொள்ளுதல் எதனாலுண்டாகின்றது? கர்மத்தினால்.

कर्म केन भवति ? इति चेत्, रागादिभ्यः ।

கர்ம மெதனாலுண்டாகின்ற தெனின், இராகாதிகளாலுண்டாகின்றது.

रागादयः कस्मात् भवन्ति ? इति चेत्, अभिमानात् ।

இராகாதிக ளெதனாலுண்டாகின்றன வெனின், அபிமாநத்தால்.

अभिमानोऽपि कस्मात् भवति ? अविवेकात् ।

அபிமாநமும் எதனாலுண்டாகின்றது? அவிவேகத்தால்.

अविवेकः कस्मात् भवति? अज्ञानात्। अज्ञानं केन भवति? इति चेत्, न केनापि। अज्ञानं नाम अनादि सदसद्भ्यामनिर्वचनीयं त्रिगुणात्मकं ज्ञानविरोधि भावरूपं यत्किंचिदिति वदन्ति, अहमज्ञ इत्याद्यनुभवात्। 'देवात्मशक्तिं स्वगुणैर्निरूढाम्' इत्यादिश्रुतेः। तस्मादज्ञानादविवेको जायते। अविवेकादभिमानो जायते। अभिमानाद्रागादयो जायन्ते। रागादिभ्यः कर्माणि जायन्ते। कर्मभ्यः शरीरपरिग्रहो जायते। शरीरपरिग्रहाद् दुःखं जायते।

அவிவேகம் எதனாலுண்டாகின்றது? அஞ்ஞானத்தால். அஞ்ஞானம் எதனாலுண்டாகின்றதெனின் எதனாலுமில்லை அஞ்ஞானமென்பது அநாதியும் சத்தசத்துக்களிரண்டினாலும் இன்னதென்று உறுதியாய்ச் சொல்லத்தகாததும், முக்குணவடிவினதும், ஞானவிரோதியும், பாவரூப (இருப்பு வடிவ)முமாய் யாதோவொன்றானது என்று கூறுகின்றனர்; "யான் அஞ்ஞன்" என்றல் முதலிய அநுபவமிருத்தலாலும், "தன்து குணங்களால் நிரூடமான தேவாத்ம சக்தியை" என்றல் முதலிய சுருதியிருத்தலாலும். அவ்

வஞ்ஞானத்தினால் அவிவேக முண்டாகின்றது. அவிவேகத்தினால் அபிமான முண்டாகின்றது. அபிமானத்தால் (தேகாதி கிருகாதிகளிலுண்டாம் யானெனது என்னும் புத்தி) இராகாதிக ளுண்டாகின்றன. இராகாதிகளினின்று கர்மங்க ளுண்டாயின. கர்மங்களினின்று சரீரத்தைக் கொள்ளுத லுண்டாகின்றது. சரீரத்தைக்கொள்ளுதலால் துக்க முண்டாகின்றது.

दुःखस्य कदा निवृत्तिः ? सर्वात्मना शरीरपरिग्रहनाशे सति दुःखस्य निवृत्तिर्भवति । सर्वात्मपदं किमर्थम् ? सुषुप्तावस्थायां दुःखे निवृत्तेऽपि पुनरुत्थानसमये उत्पद्यमानत्वाद्वासनात्मना स्थितं भवति । अतस्तन्निवृत्त्यर्थं सर्वात्मपदम् ।

துக்கத்திற்கு நிவிருத்தி எப்போது? சரீரத்தைக் கொள்ளுதலானது முற்றும் நாசமானபோது துக்கத்தின் நிவிருத்தியுண்டாகின்றது. முற்றும் என்று சொல்லுவானேன்? சுழுத்தியவஸ்தையில் துக்கம் நீங்கியும் மறுபடியும் எழுங்காலத்தில் உண்டாகின்றதாயிருத்தலின் (சுழுத்தியில்) வாசனை வடிவமாக நிற்பதாகின்றது. ஆகலால் அதன் நீக்கத்தின்பொருட்டு முற்றும் என்று சொல்லப்பட்டது.

शरीरपरिग्रहनिवृत्तिः कदा भवति ? सर्वात्मना कर्मणि निवृत्ते सति । कर्मनिवृत्तिः कदा भवति ? सर्वात्मना रागादौ निवृत्ते सति । रागादिनिवृत्तिः कदा भवति ? सर्वात्मना अभिमाने निवृत्ते सति । कदा अभिमाननिवृत्तिः ? सर्वात्मना अविवेके निवृत्ते सति । कदा अविवेकनिवृत्तिः ? सर्वात्मना अज्ञाने निवृत्ते सति । कदा अज्ञाननिवृत्तिः ? ब्रह्मात्मैकत्वे जाते सति अविद्यानिवृत्तिः सर्वात्मना भवति ।

சரீரத்தைக் கொள்ளுதலின் நீக்கம் எப்போதுண்டாகின்றது? முற்றும் கர்மம் ஒழிந்தபோது. கர்ம நிவிருத்தி எப்போ துண்டாகின்றது? முற்றும் இராகாதி ஒழிந்தபோது. இராகாதிகளின் நீக்கம் எப்போ துண்டாகின்றது? முற்றும் அபிமான மொழிந்தபோது. அபிமானம் எப்போது நீங்கும்? அஞ்ஞானம் முற்று மொழிந்தபோது. அஞ்ஞானம் முற்றும் எப்போது ஒழியும்? பிரஹ்மாத்மைக்கியம் அறியப்பட்டபோது அஞ்ஞானம் அடியோடு நீங்கும்.

ननु नित्यानां कर्मणां विहितत्वात् नित्येभ्यः कर्मभ्यः अविद्यानिवृत्तिः स्यात् किमर्थं ज्ञानम् ? इत्याशङ्क्य न कर्मा-

दिना अविद्यानिवृत्तिः । तत्कुतः? इति चेत्, कर्मज्ञानयो-र्विरोधो भवेत् ।

நித்தியகர்மங்கள் விதிக்கப்பட்டனவாயிருந்தவின் நித்திய கர்மங்களால் அவித்தியாநிவிருத்தி யுண்டாம். ஞானத்தினுல் என்னையெனின், கர்மாதிகளால் அவித்தை நீங்காது. அஃது எதனுலெனின், கர்மம் ஞானமிரண்டற்கும் விரோதமுண்டாகின்றது.

अतो ज्ञानेनैव अज्ञाननिवृत्तिः । तज्ज्ञानं कुतः? इति चेत्, विचारादेव भवति । आत्मानात्मविवेकविषयविचाराद्भवति । तस्मिन् विचारे को वा को वा अधिकारी? साधनचतुष्टयसंपन्नोऽधिकारी ।

साधनचतुष्टयं नाम— १ नित्यानित्यवस्तुविवेकः, २ इहामुत्रफलभोगविरागः, ३ शमादिषट्संपत्तिः, ४ मुमुक्षुत्वं चेति । नित्यानित्यवस्तुविवेको नाम, ब्रह्म सत्यं, जगन्मिथ्यैवेति निश्चयः ।

ஆதலால் ஞானத்தினுலேயே அஞ்ஞான நிவிருத்தியாம். அந்த ஞானம் எதனுலாமெனின், விசாரத்

திலேயே யுண்டாகின்றது அதாவது ஆத்மாநாத்ம விவேகவிஷய விசாரத்தினாலுண்டாகின்றது. அந்தவிசாரத்தில் எவனெவன் அதிகாரி? சாதன சதுஷ்டய சம்பன்னன் அதிகாரி.

சாதன சதுஷ்டயமாவன:— ௧. நித்தியா நித்திய வஸ்து விவேகம், ௨. இகாமுத்திர (இம்மைமறுமைப்) பலபோக விராகம், ௩. சமாதிஷட்கசம்பத்தி, ௪. முமுக்ஷுத்துவ மென்பன; அவற்றுள்,

௧. பிரஹ்மம் சத்தியம், ஜகத்து மித்தையே என்னும் நிச்சயம் நித்தியா நித்திய வஸ்துவிவேகமாம்.

इह अस्मिन् लोके देहधारणव्यतिरिक्तविषये स्रक्चन्दनवनितादिसंभोगे वान्ताशनमूत्रपुरीषादौ यथा इच्छा नास्ति, तथा इच्छाराहित्यमिति इहलोकविरागः। अमुत्र स्वर्गलोकादिब्रह्मलोकान्तवर्तिषु रम्भोर्वश्यादिसंभोगादिविषयेषु तद्वत् इच्छाराहित्यं परलोकविरागः। शमादिषट्कं नाम, शम-दमोपरति-तितिक्षा-समाधानश्रद्धाः।

௨. இகாமுத்திரபலபோக விராகமாவது இவ்வுலகத்தில் தேகதாரணத்திற்கு வேறான விஷயங்களாகிய

மாலை சந்தனம் ஸ்திரீமுதலிய சம்போகத்தில், வாந்தியன்ன மலமூத்திராதிகளி லிச்சையில்லாததுபோல இச்சையின்றி யிருத்தல் இகலோகவிராகம். சுவர்க்காதி பிரஹ்மலோக பரியந்தமுள்ள ரம்பை, ஊர்வசிமுதலியோர் சம்போகாதி விஷயங்களில் அதுபோல இச்சையின்றியிருத்தல் பரலோகவிராகம்.

௩. சமாதிஷட்கசம்பத்தியாவது சமமுதலிய ஆறன் அடைவு. சமமுதலிய ஆறுவன:—(க) சமம், (உ) தமம், (௩) உபரதி, (௪) திதிக்ஷை, (ரு) சமாதானம், (௬) சிரத்தை என்பன.

शमो नाम अन्तरिन्द्रियनिग्रहः। अन्तरिन्द्रियं नाम मनः। तस्य निग्रहः श्रवणमननिदिध्यासनव्यतिरिक्तविषयेभ्यो निवृत्तिः । श्रवणादौ वर्तमानत्वं वा शमः । அவற்றுள்,

(க) சமமாவது அந்தரிந்திரிய நிக்கிரகம் (உள்ளிந்திரிய வடக்கம்). அந்தரிந்திரியமாவது மனம். அதன் அடக்கமாவது சிரவண மனன நிதித்தியாசனங்களுக்கு வேறான விஷயங்களிற் செல்லாது தடுத்தல், அல்லது சிரவணாதியில் இருக்குந்தன்மை சமமாம்.

श्रवणं नाम षड्विधलिङ्गैरशेषवेदान्तानामाद्वितीयवस्तुनि तात्पर्यावधारणम् । षड्विधलिङ्गानि तु उपक्रमोपसंहारा-भ्यास - फलापूर्वतार्थवादोपपत्त्याख्यानि । प्रकरणप्रतिपाद्य-स्यार्थस्य तदाद्यन्तयोरुपपादनमुपक्रमोपसंहारौ । यथा च्छा-न्दोग्ये षष्ठाध्याये प्रकरणप्रतिपाद्यस्याद्वितीयवस्तुनः एकमे-वाद्वितीयमित्यादौ ऐतदात्म्यमित्यन्ते च प्रतिपादनम् । प्र-करणप्रतिपाद्यस्य तन्मध्ये पौनःपुन्येन प्रतिपादनमभ्यासः । यथा तत्रैवाद्वितीयवस्तुनो मध्ये तत्त्वमसीति नवकृत्वः प्र-तिपादनम् । फलं तु प्रकरणप्रतिपाद्यस्यात्मज्ञानस्य तदनु-ष्ठानस्य वा तत्र श्रूयमाणं प्रयोजनम् । यथा तत्र तत्र आचार्यवान् पुरुषो वेद तस्य तावदेव चिरं यावन्न वि-मोक्ष्ये अथ संपत्स्ये इति अद्वितीयवस्तुज्ञानस्य तत्प्राप्तिः प्रयोजनं फलं श्रूयते । अपूर्वता तु प्रकरणप्रतिपाद्यस्याद्वि-तीयवस्तुनः प्रमाणान्तराविषयीकरणम् । यथा तत्रैवाद्वि-तीयवस्तुनो मानान्तराविषयीकरणम् । प्रकरणप्रतिपाद्यस्य तत्र तत्र प्रशंसनमर्थवादः। यथा अत्र उत तमादेशमप्राक्ष्यो

येनाश्रुतं श्रुतं भवति अमतं मतम् अविज्ञातं विज्ञातमिति अद्वितीयवस्तुप्रशंसनम् । प्रकरणप्रतिपाद्यार्थसाधने तत्र श्रूयमाणा युक्तिरुपपत्तिः । यथा तत्र यथा सोम्यैकेन मृत्पिण्डेन सर्वं मृन्मयं विज्ञातं स्याद्वाचारम्भणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यमित्यादौ अद्वितीयवस्तुसाधने विकारस्य वाचारम्भणमात्रत्वे युक्तिः श्रूयते ।

[க] சிரவணமாவது ஷட்வித (அறுவகை)லிங்கங்களால் சகல வேதாந்தங்களுக்கும் அத்வைத வஸ்துவில் தாற்பரியத்தை நிச்சயித்தல். அறுவகை இலிங்கங்களாவன (அ) உபக்கிரமோபசங்காரம், (ஆ) அப்பியாசம், (இ) பலம், (ஈ) அபூர்வதை, (உ) அர்த்தவாதம், (ஊ) உபபத்தி என்பன. அவற்றுள், (அ) பிரகரணத்திற் சொல்லப்படும்பொருள் அதன் (பிரகரணத்தின்) முதலிலும் கடையிலும் பொருந்தியிருப்பது உபக்கிரமோபசங்காரங்கள் (உபக்கிரமம் உபசங்காரம் இரண்டும் ஒருலிங்கம்.) அது, சாந்தோக்கியத்தின் ஆறுவது ஆத்தியாயத்தில் பிரகரணத்தாற் பிரதிபாதிக்கப்படும் பொருளாகிய அத்விதீயவஸ்துவினை "ஏகமே-

அத்விதீயம்" என்று ஆதியிலும், "இச்சத்ரூப ஆத்மாவினையுடையது" என்று அந்தத்திலும் கூறுதல். (ஆ) பிரகரணத்தினல் சொல்லப்படுவதனை அதன் (பிரகரணத்தின்) மத்தியில் மறுபடியும் மறுபடியும் சொல்லுதல் அப்பியாசம். அது, அவ்விடத்திற்றனே (சாந்தோக்கியத்தின் ஆருவது அத்தியாயத்திற்றனே) இடையில் அத்வைதவஸ்துவினை தத்துவமஸியென்று ஒன்பது முறை கூறுதலாம். (இ) பிரகரணத்தாற் சொல்லப்படும் ஆத்மஞானத்தின் அல்லது அதன் அநுஷ்டானத்தின் அங்குக் கேட்கப்படும் பிரயோஜனம் பலமாம். அது (அவ்விடத்திற்றனே) அங்கங்கு "ஆசாரியனையுடைய புருஷன் அறிகின்றான்." "எது வரையில் விசேஷமாய் விடுபட(தேகத்தின் வீழ்ச்சியுண்டாக)வில்லையோ அதுவரையில் சத்தினடைவில்) தாமதமுண்டு. இனி (தேகம் விழுந்தபின்) அடைகின்றான்." என்று அத்விதீயவஸ்துவின் ஞானமும் அதன் அடைவும் பிரயோஜனமாகக் கேட்கப்படுகின்றது. (ஈ) பிரகரணத்தாற் சொல்லப்படும் அத்விதீயவஸ்து வேறு பிரமாணங்களால் விஷயிக்கப்படாமை அபூர்வதை. அது அவ்விடத்திற்றனே அத்

விதீயவஸ்து வேறு பிரமாணங்களால் விஷயமாகாமை யாம். (உ) பிரகரணத்தாற் சொல்லப்படுவதனை அங்கங்கு துதித்தல் அர்த்தவாதம். அது, அவ்விடத்திற்றானே "எதனால் கேட்கப்படாதது கேட்கப்பட்டதாகின்றதோ கருதப்படாதது கருதப்பட்டதாகின்றதோ, விசேஷமாயறியப்படாதது விசேஷமாயறியப்பட்டதாகின்றதோ, அவ்வுபதேசத்தினைக் கேட்டிருக்கிறாயா"? என்று அத்வைதவஸ்துவின் ஸ்துதி சொல்லப்பட்டிருத்தலாம். (ஊ) பிரகரணத்தாற் சொல்லப்படும் அர்த்தத்தை சாதித்தலில் அங்குக்கேட்கப்படும் யுக்தி உபபத்தியாம். அது, அங்கு (சாந்தோக்கியத்து) "சௌமியனே! ஒரு மண்திரளால்(கடாதிகாரியம்) எல்லாம் மண்மயமாக அறியப்பட்டதாம், வாக்கின் ஆசிரயமான விகார(காரிய)ம் பெயர்மாத்திரமாம், மண்ணென்பதே சத்தியமாம்" என்றல் முதலியவற்றில் அத்வைத வஸ்துவைச் சாதித்தலில் விகாரம் வாக்கின் ஆசிரயமாத்திரமா மென்பதில் யுக்தி கேட்கப்படுகின்றது.

मननंतु श्रुतस्याद्वितीयवस्तुनो वेदान्तार्थानुगुणयुक्तिभिरनवरतमनुचिन्तनम् ।

[உ] கேட்ட அத்விதீயவஸ்துவினை வேதாந்தார்த்தாநுகுணயுக்திகளால் இடைவிடாது சிந்தித்தல் மனனமாம்.

विजातीयदेहादिप्रत्ययरहिताद्विजातीयवस्तुसजातीयप्रत्ययप्रवाहो निदिध्यासनम् । अस्यार्थः । विजातीयदेहादिबुद्ध्यन्तजडपदार्थनिराकरणेन सजातीयाद्वितीयवस्तुविषयप्रत्ययप्रवाहीकरणं निदिध्यासनमित्यर्थः ।

[ந] விஜாதீய(வேற்றின) தேகாதிப் பிரத்திய(ஞான)மின்றிய அத்விதீயவஸ்துவின் ஸஜாதீய(ஓரின) பிரத்தியப்பிரவாகம் (தொடர்பு) நிதித்தியாசனமாம். இதன்பொருள்:—விஜாதீயதேகமுதல் புத்தியீறான ஜடபதார்த்தங்களை நீக்குதலால் சஜாதீய அத்விதீயவஸ்து விஷயிக்கும் பிரத்தியயத்தினை பிரவாகவடிவமா(தொடர்ந்ததா)க்கல் நிதிதியாசனமென்பதாம்.

दमो नाम बाह्येन्द्रियनिग्रहः । बाह्येन्द्रियाणि कानि ? कर्मेन्द्रियाणि पञ्च ज्ञानेन्द्रियाणि पञ्च । तेषां निग्रहः श्रव-

णादिव्यतिरिक्तविषयेभ्यो निवृत्तिः । उपरतिर्नाम विहितानां कर्मणां विधिना परित्यागः । श्रवणादिष्वेव वर्तमानस्य मनसः श्रवणादौ वर्तमानत्वं वा उपरतिः । तितिक्षा नाम देहविच्छेदव्यतिरिक्तं शीतोष्णादिद्वन्द्वसहनम् । निग्रहशक्तावपि परापराधसोढृत्वं वा तितिक्षा । समाधानं नाम, श्रवणादिषु वर्तमानं मनो वासनावशाद्विषयेषु यदा यदा गच्छति तदा तदा दोषदृष्ट्या तेषु तेषु श्रवणादिषु समाधिः समाधानम् । श्रद्धा नाम, गுरुवेदान्तवाक्येषु अतीव विश्वासः ।

(உ) தமமாவது பாஹ்யேந்திரிய நிக்கிரகம். பாஹ்யேந்திரியங்கள் யாவை? கர்மேந்திரியங்கள் ஐந்தும், ஞானேந்திரியங்கள் ஐந்துமாம். அவற்றின் நிக்கிரகமாவது சிரவணாதிகட்கு வேறான விஷயங்களினின்றும் திருப்புதல்.

(ங) உபரதியாவது விதிக்கப்பட்ட கர்மங்களை விதியோடு விடுதல். அல்லது சிரவணமுதலிய வற்றிலேயே இருக்கின்ற மனது சிரவணமுதலியவற்றிலிருத்தல் உபரதியாம்.

(௪) திதிக்ஷையாவது தேகவிச்சேதத்தின் வேறாய சீதம் உஷ்ணமுதலிய த்வந்த்வங் (இருமை)களைச் சகித்தல் அல்லது தண்டிக்கும் சாமர்த்தியமிருந்தும் பிறன் பிழையைச் சகித்தல் திதிக்ஷையாம்.

(௫) சமாதானமாவது சிரவணாதிகளிலிருக்கும் மனது வாசனையின் வசத்தால் விஷயங்களில் எப்போதெப்போது செல்லுகின்றதோ அப்போதப்போது அவ்வவற்றில் தோஷதிருஷ்டியினால் செல்லாது தடுத்துச் சிரவணாதிகளில் செவ்வையாய் நிறுத்துதல்.

(௬) சிரத்தையாவது குருவேதாந்த வாக்கியங்களில் உண்டாம் மிக்க விசுவாசம்.

இதுவரை சமாதிஷட்கமென்பது சொல்லப்பட்டது.

मुमुक्षुत्वं नाम, मोक्षेऽतितीव्रेच्छावत्त्वम् । एतत्साधनचतुष्टयसंपत्तिः, तद्वान् साधनचतुष्टयसंपन्नः । तस्य आत्मानात्मविचारेऽधिकारः । यथा ब्रह्मचारिणः कर्तव्यान्तरं नास्ति, तथास्यान्यत् कर्तव्यं नास्ति ।

முமுக்ஷுத்துவமாவது மோக்ஷத்தில் அதிதீவிரமான இச்சையுடைமை.

இதுசாதன சதுஷ்டயசம்பத்தி (சாதனம் நான்கன் அடைவு). இதனையுடையவன் சாதன சதுஷ்டய சம்பன்னன். அவனுக்கு ஆத்மாநாத்ம விசாரத்தில் அதிகாரமாம். பிரஹ்மசாரிகளுக்கு (வேதாத்தியயனத்தினும்) வேறு கர்த்தவ்வியமில்லாதது. அது போல (முமுக்ஷுவுக்கு) வேறு கர்த்தவ்வியமில்லை.

साधनचतुष्टयसंपत्त्वभावेऽपि गृहस्थानामात्मविचारे क्रियमाणे सति तेन प्रत्यवायो नास्ति, किंतु अतीव श्रेयो भवति । यथा

சாதன சம்பத்தியில்லாத போதும் கிருகஸ்தர்களுக்கு ஆத்மவிசாரஞ் செய்யின் அதனால் பிரத்தியவாயம்(குற்றம்) இல்லை. ஆனால் மிக்கசிரேயசுண்டாம்.

"दिने दिने च वेदान्तविचाराद्भक्तिसंयुतात् ।
गुरुशुश्रूषया लब्धात् कृच्छ्राशीतिफलं भवेत्" इत्युक्तम् ॥

அது பக்தியோடுகூடியதாம், குருபணிவிடையா லடையப்படுவதுமான வேதாந்த விசாரத்தினால் எண்பது கிருச்சிரபலமுண்டாம்.” என்று சொல்லப்பட்டுளது.

आत्मानात्मविचारः कर्तव्य इत्युक्तम् ॥

आत्मा नाम स्थूलसूक्ष्मकारणशरीरत्रयविलक्षणः पञ्चकोशव्यतिरिक्तः अवस्थात्रयसाक्षी सच्चिदानन्दस्वरूपः ॥

ஆத்மாநாத்ம விசாரம் செய்யத்தக்கதா மென்று சொல்லப்பட்டது.

ஆத்மா வென்பது ஸ்தூலம் சூக்ஷ்மம் காரண மென்னும் சரீரமூன்றின் வேறுபட்டதாய், பஞ்சகோசங்கட் கப்பாற்பட்டதாய், அவஸ்தை மூன்றன் சாக்ஷியாயுள்ள சச்சிதாநந்த ஸ்வரூபமாம்.

अनात्मा नाम अनृतजडदुःखात्मकं समष्टिव्यष्ट्यात्मकशरीरत्रयम् । शरीरत्रयं नाम स्थूलसूक्ष्मकारणशरीरत्रयम् ॥

அநாத்மா வென்பது அநிருதம்(பொய்) ஜடதுக்க வடிவினதாகிய சமஷ்டி வியஷ்டி வடிவ சரீரத்திரயமாம். சரீரத்திரய மாவது ஸ்தூலம், சூக்ஷ்மம், காரண மென்னும் மூன்று சரீரமாம்.

स्थूलशरीरं नाम पञ्चीकृतभूतकार्यं कर्मजन्यं जन्मादि षड्भावविकारः ॥

॥ तथा चोक्तम् ॥

पञ्चीकृतमहाभूतसंभवं कर्मसंचितम् ।
शरीरं सुखदुःखानां भोगायतनमुच्यते ॥
पञ्चीकरणं तु-द्विधा विधाय चैकैकं चतुर्धा प्रथमं पुनः ।
स्वस्वेतरद्वितीयांशैर्योजनात् पञ्च पञ्च ते ॥ इति ।

शीर्यते वयोभिर्बाल्यकौमारयौवनवार्धक्यादिभिरिति शरीरम् । दह भस्मीकरणे इति व्युत्पत्त्या च देहः भस्मीभावं प्राप्नोति । ननु केचिद्देहा न भस्मीभावं प्राप्नुवन्ति, केचिद्देहाः खननादिं प्राप्नुवन्ति, कथमुच्यते सर्वं स्थूलादिकं स्थूलदेहजातं भस्मीभावं प्राप्नोतीति, यद्यप्येवं तथापि केनाग्निना दाहत्वं संभवतीत्यत आह, सर्वेषां स्थूलदेहानाम् आध्यात्मिकाधिभौतिकाधिदैविकतापत्रयाग्निना दाहत्वं संभवति । आध्यात्मिकं नाम आत्मानं देहम् आधिकृत्य वर्तत इत्यध्यात्मम् । अध्यात्मं च तत् दुःखं च आध्यात्मिकं

वातपित्तकफजातं शिरोरोगज्वरादिना व्याधिरूपम् । आधिभौतिकं नाम भूतमधिकृत्य वर्तते इत्याधिभौतिकं व्याघ्रतस्करादिजन्यदुःखम् । आधिदैविकं नाम देवमधिकृत्य वर्तते इत्याधिदैविकं शीतातपवातवर्षवैद्युतादिदुःखम् ॥

க. ஸ்தூல மென்பது பஞ்சீகிருத(பஞ்சீகரணஞ் செய்யப்பட்ட) பூதகாரியமும், கர்மத்தாற் றோன்றிய தும், ஜன்மமுதலிய ஷட்பாவவிகார வடிவினதுமாம். அது "பஞ்சீகிருத மகாபூத சம்பவமும், கர்மத்தாற் சேர்க்கப்பட்டதுமான சரீரம் சுகதுக்கங்களின் போகத்திற் கிடமென்று சொல்லப்படுகின்றது." என்று சொல்லப்பட்டுளது. பஞ்சீகரணமோ, "ஒவ்வொரு பூதத்தையும் இரண்டிரண்டாக்கி அவற்றுள் ஒவ்வொன்றன் முதற்பாகத்தை நந்நான்காக்கி அவற்றைத் தத்தம் அம்சத்திற்குவேறான அம்சங்களோடு சேர்த்தலால் அவை அவ்வைந்தாகின்றன." என்று சொல்லப்பட்டிருக்கிறது.

பால்ய கௌமார யௌவன வார்த்தக்கிய(முதுமை)வயதுகளால் சீரிக்க(கெடுக்க)ப்படுகின்றது அதனால் சரீரமாம். தகித்தல் சாம்பலாக்குதலில் என்னும்

விற்பத்தியால் தேகம் சாம்பற்றன்மையை அடைகின்றது(நீறுகின்றது). அப்படியானல் சிலதேகம் சாம்பலாகிறது. சில சரீரம் புதைத்தல் முதலியவற்றை யடைகின்றது. எப்படி எல்லா ஸ்தூல தேகக் கூட்டமும் சாம்பலாகின்றதென்று சொல்லப்படும்? இவ்வாறயினும் எந்த அக்கினியால் தகிக்குந்தன்மை சம்பவிக்கின்றதென்பதைக் கூறுவார்:—எல்லா ஸ்தூல தேகங்கட்கும் ஆத்யாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதிதைவிக மென்னும் தாபத்திரயாக்கினியினால் சுடுந்தன்மை சம்பவிக்கின்றது. ஆத்யாத்மிகமாவது ஆத்மாவாகிய தேகத்தினை அதிகரித்து இருப்பது என்பதனால் அத்தியாத்மமாம். அத்தியாத்மமாகிய அத்துக்கம் ஆத்தியாத்மிகமாம். அது வாதபித்த கபத்தாலாவதாம்; தலைவலி ஜ்வர முதலியனவாக வியாதிரூபமாம். ஆதிபௌதிகமாவது பூதத்தினை யதிகரித்து இருக்கிறது என்பதனால் ஆதிபௌதிகமாம். அது புலி திருடர் முதலியவற்றாலாம் துக்கம். ஆதிதைவிகமென்பது தெய்வத்தை யதிகரித்து இருக்கிறது என்பதனால் ஆதிதைவிகமாம். அது குளிர் வெயில் காற்று மழை இடி மின்னல் முதலியனவாலுண்டாம் துக்கம்.

सूक्ष्मशरीरं नाम अपञ्चीकृतभूतकार्यं सप्तदशकं लिङ्गम् । सप्तदशकं नाम ज्ञानेन्द्रियाणि पञ्च, कर्मेन्द्रियाणि पञ्च, प्राणादिवायवः पञ्च, बुद्धिर्मनश्चेति ॥

ज्ञानेन्द्रियाणि कानि ? श्रोत्रत्वक्-चक्षुर्जिह्वाघ्राणानि । श्रोत्रेन्द्रियं नाम, कर्णव्यतिरिक्तं कर्णशष्कुल्यवच्छिन्ननभोदेशाश्रयं शब्दग्रहणशक्तिमदिन्द्रियं श्रोत्रेन्द्रियमिति । त्वगिन्द्रियं नाम, त्वग्व्यतिरिक्तं त्वगाश्रयम् आपादतलमस्तकव्यापि शीतोष्णादिस्पर्शग्रहणशक्तिमदिन्द्रियं त्वगिन्द्रियमिति । चक्षुरिन्द्रियं नाम, गोलकव्यतिरिक्तं गोकाश्रलयं कृष्णतारकाग्रवर्ति रूपादिग्रहणशक्तिमदिन्द्रियं चक्षुरिन्द्रियमिति । जिह्वेन्द्रियं नाम, जिह्वाव्यतिरिक्तं जिह्वाश्रयं जिह्वाग्रवर्ति रसादिग्रहणशक्तिमदिन्द्रियं जिह्वेन्द्रियमिति । घ्राणेन्द्रियं नाम, नासिकाव्यतिरिक्तं नासिकाश्रयं नासिकाग्रवर्ति गन्धादिग्रहणशक्तिमदिन्द्रियं घ्राणेन्द्रियमुच्यते ॥

உ. சூக்ஷ்ம சரீரமாவது அபஞ்சீகிருத பூதகாரியமும் பதினேழு தத்துவ வடிவினதுமான லிங்கமாம்.

பதினேழாவன:—ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, பிராணாதிவாயுக்கள் ஐந்து, புத்தி, மனது என்பன. ஞானேந்திரியங்கள் எவை? சுரோத்திரம்,(காது), துவக்கு(தோல் அதாவது மெய்), சக்ஷுஸ் (கண்), ஜிஹ்வை(நா) கிராணம்(மூக்கு) என்பன. சுரோத்திரேந்திரியமாவது காதினுக்குவேறாய், காதுத்துளையில் விளைப்பட்ட ஆகாயாசிரயமாய், சப்தத்தைக் கிரகிக்கும் சக்தியுடைய இந்திரியம் சுரோத்திரேந்திரியமென்க. துவக்கிந்திரியமாவது மெய்யின் தோலிற்குவேறாய், துவக்கை யிடமாகக்கொண்டு, பாதமுதல் சிரசுவரை வியாபித்ததாய் சீதவெப்பமுதலிய ஸ்பரிசத்தைக் கிரகிக்கும் சக்தியுடைய விந்திரியம் துவக்கிந்திரியமென்க. சக்ஷுரிந்திரியமாவது நேத்திரகோளகத்தின் வேறாய், கோளகத்தை இடமாகக்கொண்டு கருவிழியினுனியிலிருப்பதான உருவ(நிற) முதலியவற்றைக்கிரகிக்கும் சக்தியுடைய இந்திரியம் சக்ஷுரிந்திரிய மென்க. ஜிஹ்வேந்திரியமாவது நாவின் வேறுபட்டதாய், நாவினை யிடமாகக்கொண்டு நாவினுனியிலிருப்பதான இரஸ முதலியவற்றைக் கிரகிக்கும் சக்தியுடைய இந்திரியம் ஜிஹ்வேந்திரிய மென்க.

கிராணேந்திரியமாவது நாசியின் வேறுபட்டதாய், நாசிகையை இடமாகக் கொண்டு நாசிநுனியிலிருப்பதான கந்தத்தைக் கிரகிக்கும் சக்தியுடைய இந்திரியம் கிராணேந்திரிய மெனப்படும்.

कर्मेन्द्रियाणि कानि ? वाक्पाणिपादपायूपस्थानि । वागिन्द्रियं नाम, वाग्व्यतिरिक्तं वागाश्रयम् अष्टस्थानवर्ति शब्दोच्चारणाशक्तिमदिन्द्रियं वागिन्द्रियमिति । अष्ट स्थानानि, उरःकण्ठशिरस्तालुजिह्वादन्तौष्ठनासिकाः । पाणीन्द्रियं नाम, पाणिव्यतिरिक्तं करतलाश्रयं दानप्रतिग्रहशक्तिमदिन्द्रियं पाणीन्द्रियमित्युच्यते । पादेन्द्रियं नाम पादव्यतिरिक्तं पादाश्रयं पादतलवर्ति गमनागमनशक्तिमदिन्द्रियं पादेन्द्रियमिति । पाय्विन्द्रियं नाम, गुदव्यतिरिक्तं गुदाश्रयं पुरीषोत्सर्गशक्तिमदिन्द्रियं पाय्विन्द्रियमिति । उपस्थेन्द्रियं नाम, उपस्थव्यतिरिक्तं उपस्थाश्रयं मूत्रशुक्रोत्सर्गशक्तिमदिन्द्रियं उपस्थेन्द्रियमिति । एतानि कर्मेन्द्रियाणि ॥

கர்மேந்திரியங்கள் எவை? வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தமென்பன. வாக்கிந்திரியமாவது வாக்கிற்குவேறாய், வாக்கினை இடமாகக்கொண்டதாய், எட்டிடங்களிலிருப்பதாய், சப்தத்தையுச் சரிக்குஞ் சக்தியுடைய இந்திரியம் வாக்கிந்திரிய மென்க. எட்டு இடங்களாவன மார்பு, கண்டம், சிரசு, அண்ணம்(மேல்வாய்), நா, பல், உதடு, நாசி என்பன. பாணீந்திரியமாவது கையின் வேறாய், கைத்தலத்தை யிடமாகக் கொண்டதாய், கொடுக்கல் வாங்கல்களைச் செய்யும் சக்தியுடைய இந்திரியம் பாணீந்திரியம் என்க. பாதேந்திரியமாவது பாதத்தின்வேறாய், பாதத்தை யிடமாகக் கொண்டதாய், போகுதல் வருதற் சக்தியுடைய இந்திரியம் பாதேந்திரிய மென்க. பாயு விந்திரியமாவது குத(மலத்துவார)த்தின் வேறாய், குதத்தினை யிடமாகக் கொண்டதாய் மலத்தை வெளிப்படுத்தும் சக்தியுடைய இந்திரியம் பாயுவிந்திரிய மென்க. உபஸ்தேந்திரியமாவது உபஸ்த (மூத்திரத் துவார)த்தின் வேறாய், உபஸ்தத்தை யிடமாகக் கொண்டதாய், மூத்திர சுக்கிலங்களை வெளிப்படுத்தும் சக்தியுடைய இந்திரியம் உபஸ்தேந்திரிய மென்க. இவை கர்மேந்திரியங்கள்.

अन्तःकरणं नाम मनो बुद्धिश्चित्तमहङ्कारश्चेति । मनसः स्थानं गलान्तम् । बुद्धेर्वदनम् । चित्तस्य नाभिः । अहङ्कारस्य हृदयम् । एतेषां विषयाः संशयनिश्चयधारणाभिमानाः । अनुसंधानात्मकान्तःकरणवृत्तिश्चित्तम् । अभिमानात्मकान्तःकरणवृत्तिरहङ्कारः। चित्तस्य बुद्धावन्तर्भावः, विषयपरिच्छित्तिरूपत्वाविशेषात् । अहङ्कारस्य मनस्यन्तर्भावः, तस्यापि संकल्पात्मकत्वाविशेषात् । बुद्धेर्ह्यपूर्वो विषयः । चित्तस्य पूर्वानुभवः । मनसो बाह्याभ्यन्तरश्च । अहंकारस्य त्वमात्मोपरक्त आत्मैवेति ।

प्राणादिवायुपञ्चकं नाम प्राणापानसमानोदानव्यानरूपम्। तस्य स्थानविशेषा उच्यन्ते ।

हृदि प्राणो गुदेऽपानः समानो नाभिदेशगः ।
उदानः कण्ठदेशस्थो व्यानः सर्वशरीरगः ।

एतेषां विषयाः । प्राणः प्रागननवान् । अपानः अवागननवान् । उदान ऊर्ध्वगमनवान् । समानः समीकरणवान् । व्यानः विष्वगननवान् ।

एतेषामुपवायवः पञ्च ।

नागः कूर्मश्च कृकरो देवदत्तो धनञ्जय इति ।

एतेषां विषयाः ।

नागादुद्गिरणं चापि कूर्मादुन्मीलनं तथा ।
धनंजयात् पोषणं च देवदत्ताच्च जृम्भणम् ।
कृकराच्च क्षुतं जातमिति योगविदो विदुः ।
एतेषां ज्ञानेन्द्रियादीनामधिपतयो दिगादयः ।
दिग्वातार्कप्रचेतोऽश्विवह्नीन्द्रोपेन्द्रमित्रकाः ।
तथा चन्द्रश्चतुर्वक्त्रो रुद्रः क्षेत्रज्ञ ईश्वरः ।
विशिष्टो विश्वस्रष्टा च विश्वयोनिरयोनिजः ।
क्रमेण देवताः प्रोक्ताः श्रोत्रादीनां यथाक्रमात् ।

एषु प्राणमयकोशः क्रियाशक्तिमान् कार्यरूपः । मनोमयः इच्छाशक्तिमान् करणरूपः । विज्ञानमयो ज्ञानशक्तिमान् कर्तृरूपः । एतत् सर्वं मिलितं लिङ्गशरीरमित्युच्यते । कोशत्रयमुच्यते ।

तथा चोक्तम् ।

पञ्चप्राणमनोबुद्धिदशेन्द्रियसमन्वितम् ।

अपञ्चीकृतभूतोत्थं सूक्ष्माङ्गं भोगसाधनम् ।

लीनमर्थं गमयतीति व्युत्पत्त्या लिङ्गं शरीरमित्युच्यते । कथं लीनं गमयति? श्रवणमननादिना गमयति ज्ञापयति । शीर्यत इति व्युत्पत्त्या शरीरमित्युच्यते । कथं शीर्यते इति चेत्? अहं ब्रह्मास्मीति ब्रह्मात्मैकत्वज्ञानेन शीर्यते । देह भस्मीकरण इति व्युत्पत्त्या लिङ्गदेहस्य पृथिवीपुरःसर क्षय इत्युच्यते ।

அந்தக்கரணமா (உட்கருவியா) வது மனது, புத்தி, சித்தம், அகங்கார மென்பன. மனதின் ஸ்தானம் கழுத்தின் முடிவு. புத்தியின் ஸ்தானம் முகம். சித்தத்தின் ஸ்தானம் நாபி. அகங்காரத்தின் ஸ்தானம் இருதயம். இவற்றின் விஷயம் (கிரமமாக) சம்சயம், நிச்சயம், தாரணை, அபிமானம் என்பன. அநுசந்தான (சிந்தித்தல்) வடிவினதாகிய அந்தக்கரண விருத்தி சித்தம். அபிமான வடிவ அந்தக்கரண விருத்தி அகங்கா

ரம். சித்தம் புத்தியில் அடங்கும்; விஷய நிச்சய வடிவத்தினும் பேதமின்மையால். அகங்காரம் மனதில் அடங்கும். அதுவும் சங்கற்ப வடிவத்தின் வேறுகாமையால். புத்திக்கு அபூர்வம் (முன்னறியாதது) விஷயம். சித்தத்திற்கு பூர்வாநுபவம் விஷயம். மனதிற்கு உள்ளும் வெளியும் விஷயம். அகங்காரத்திற்கு அநாத்மாவோடு கூடிய ஆத்மாவே விஷயமென்க. பிராணாதி வாயு பஞ்சகமாவது பிராண அபான சமான உதான வியான வடிவினவாம். அவற்றின் ஸ்தான விசேஷங்கள் "இதயத்தில் பிராணன். குதத்தில் அபானன். நாபிதேசத்தில் சமானன். கண்டத்தில் உதானன். சர்வசரீரத்து மிருப்பவன் வியானன்." என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றின் விஷயங்கள்:— பிராணன்முன் செல்லுதலுடையது. அபானன் கீழ்ச் செல்லுதலுடையது. உதானன் மேற்செல்லுதலுடையது. சமானன் சமமாகச் செல்லுவதுடையது. வியானன் எப்புறத்தும் செல்லுதலுடையது. இவற்றின் உபவாயுக்கள் ஐந்து. அவை நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்பன. இவற்றின் விஷயங்கள், "நாகனால் வாந்தியும், கூர்மனால்

விழித்தலும், தனஞ்சயனால் போஷித்தலும், தேவதத்த னால் கொட்டாவிவிடுதலும், கிருகரனால் தும்மலுமுண் டாயதா மென்று யோக முணர்ந்தவர் கூறுவர்." இந்த ஞானேந்திரிய முதலியவற்றிற்கு அதிபதிகள் திக்கு முதலியன. திக்கு, வாயு, சூரியன், வருணன், அசு வினி குமாரர், அக்கினி, இந்திரன், உபேந்திரன், மித்திரன், பிரஜாபதி, அப்படியே சந்திரன், நான் முகன், ருத்திரன், க்ஷேத்திரஞ்ஞன், ஈசுவரன், விசிஷ் டன், விசுவசிருஷ்டா, விசுவயோனி, அயோனிஜன், இவர்கள் முறையே சுரோத்திர முதலிய வற்றிற்குத் தேவதைகளாகின்றனர். இவற்றுள் (இச்சூக்ஷ்ம சரீ ரதத்துவங்களுள் இனிச் சொல்லப்படும் லக்ஷணமுமு டைய) பிராணமயகோசம் கிரியாசக்தியுடைய காரிய ரூபமாம். மனோமயகோசம் இச்சாசக்தியுடைய காரண ரூபமாம். விஞ்ஞானமயம் ஞானசக்தியுடைய கர்த்தா வடிவமாம் இவ்வெல்லாம் சேர்ந்து லிங்கசரீரமெனப் படும். கோசத்திரய மெனப்படும். அவ்வாறு (இவை சூக்ஷ்மசரீரமா மென்பது) "பஞ்சப்பிராணன், மனது, புத்தி தசேந்திரிய மென்பவற்றோடு கூடியதாய், அபஞ்சீகிருத பூதத்தினாலுண்டாகிய சூக்ஷ்ம சரீரம்

போக சாதனமாம்." என்று சொல்லப்பட்டிருக்கிறது. லீனமான (ஒடுங்கிய) அறிவிக்கின்றது என்னும் விற்பத்தியால் சரீரம் லிங்கமென்று சொல்லப்படுகின்றது. எப்படி லீனம்? சிரவணமனனாதியால் அறிவிக்கின்றது. சீரிக் (அழி)கின்றது என்னும் விற்பத்தியால் சரீரமெனப்படுகின்றது. எப்படி அழிகின்றதெனின், யான் பிரஹ்மமென்னும் பிரஹ்மாத்மைக்கிய ஞானத்தால் கெடுகின்றது. தகித்தல் பஸ்மமாக்குதலில் என்னும் விற்பத்தியால் விதேகதேகத்திற்குப் பிருதிவி முன்னாக க்ஷயம் சொல்லப்படுகின்றது.

कारणशरीरं नाम, शरीरद्वयहेतुः अनाद्यनिर्वचनीयं साभासं ब्रह्मात्मैकत्वज्ञाननिवर्त्यम् । अज्ञानं कारणशरीरमित्युच्यते ।

तथाचोक्तम् ।

अनाद्यविद्यानिर्वाच्या कारणोपाधिरुच्यते ।

उपाधित्रितयादन्यमात्मानमवधारयेत् ॥

शीर्यत इति व्युत्पत्त्या शरीरमित्युच्यते । कथमिति चेत् ? ब्रह्मात्मैकत्वज्ञानेन शीर्यते । दह भस्मीकरण

इति व्युत्पत्त्या कारणशरीरस्य पृथिवीपुरःसरं क्षय इत्युच्यते ।

காரண சரீரமாவது சரீரமிரண்டிற்குக் காரணமானதும், அநாதி அநிர்வசனீயமும், ஆபாஸனோடு கூடியதும் பிரஹ்மாத்மைக்கிய ஞானத்தினால் நீங்கத் தக்கதுமான அஞ்ஞானம் காரண சரீரமெனப்படும். அவ்வாறே "அநாதிய நிர்வசனீயமான அவித்தை காரணோபாதி யெனப்படும். உபாதி மூன்றற்கும் வேறான ஆத்மாவை நிச்சயஞ்செய்க" என்று சொல்லப்பட்டிருக்கிறது. சீரிக்கிறது என்னும் விற்பத்தியால் சரீரமெனப்படும். எவ்வாறெனின், பிரஹ்மாத்மைக்கிய ஞானத்தினால் கெடுகின்றது. தகித்தல் பஸ்மமாக்குதலில் என்னும் விற்பத்தியால் காரண சரீரத்திற் பிருதிவி முன்னிலையாக க்ஷயமாமென்று சொல்லப்படுகின்றது.

अनृतजडदुःखात्मकमित्युक्तम् । अनृतं नाम कालत्रयेषु अविद्यमानवस्तु अनृतमुच्यते । जडं नाम स्वविषयपरविषयज्ञानरहितं वस्तु जडम् इत्युच्यते । दुःखं नाम अप्रीतिरूपं वस्तु दुःखमित्युच्यते ।

அநிருத ஜடதுக்கவடிவ மென்று சொல்லப்பட்டது. அநிருதமாவது காலமூன்றிலும் இல்லாதவஸ்து அநிருத மெனப்படும். ஜடமாவது தன் விஷய பிற விஷயஞான மின்றிய(தன்னையும் பிறவற்றையும் அறியாத) வஸ்து ஜடமென்று சொல்லப்படும். துக்கமாவது அப்பிரீதி (பிரியமின்மை) வடிவ வஸ்து துக்கமென்று சொல்லப்படுகிறது.

समष्टिव्यष्ट्यात्मकमित्युक्तम् । किं समष्टिः? किं व्यष्टिः? यथा वनस्य समष्टिः यथा वृक्षस्य व्यष्टिः । यथा वा जलाशयस्य समष्टिः जलस्य व्यष्टिः । तद्वदनेकशरीरसमष्टिः एकशरीरस्य व्यष्टिः ।

சமஷ்டிவியஷ்டி வடிவ மென்று சொல்லப்பட்டது. சமஷ்டி யாது? வியஷ்டி யாது? எப்படி வனத்திற்கு சமஷ்டியும், விருக்ஷத்திற்கு வியஷ்டியும் சொல்லப்படுகிறதோ, அல்லது ஜலாசய முதலியவற்றிற்கு (ஏரிமுதலிய வற்றிற்கு) சமஷ்டியும் (துளி முதலிய வடிவ) ஜலத்திற்கு வியஷ்டியும் சொல்லப்படுகிறதோ, அதுபோல அநேக சரீரத்திற்குச் சமஷ்டியென்றும், ஒரு சரீரத்திற்கு வியஷ்டி யென்றும் பெயர்.

अवस्थात्रयं नाम जाग्रत्स्वप्नसुषुप्तयः । जागरणं नाम ? इन्द्रियैरर्थोपलब्धिर्जागरणम् । स्वप्नो नाम ? जागरितसंस्कारजप्रत्ययः सविषयः । सुषुप्तिर्नाम सर्वविषयज्ञानाभावः । जाग्रत्स्थूलशरीराभिमानी विश्वः । स्वप्नसूक्ष्मशरीराभिमानी तैजसः । सुषुप्ति-कारणशरीराभिमानी प्राज्ञः ।

அவஸ்தைமூன்றாவது ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி ஜாக்கிரமாவது இந்திரியங்களால் பொருள்களையறிதல் ஜாக்கிரமாம். சொப்பனமாவது ஜாக்கிரத்தின் சம்ஸ்காரத்திலுண்டாகிய ஞானம் விஷயத்தோடு சொப்பனமாம். சுழுத்தியாவது சகல விஷயஞானமுமில்லாமை. ஜாக்கிரம் ஸ்தூலதேஹம் பற்றின் அபிமானி விசுவன். சொப்பன சூக்ஷ்ம சரீரங்களின் அபிமானி தைஜசன், சுழுத்திகாரண சரீரங்களின் அபிமானி பிராஞ்ஞன்.

कोशपञ्चकं नाम अन्नमय-प्राणमय-मनोमय-विज्ञानमया-नन्दमयाख्यम् । अत्र मयट्प्रत्ययो विकारार्थः । तथाच ।

पितृभुक्तान्नजाद्वीर्यात् जातोऽन्नेनैव वर्धते ।
देहः सोऽन्नमयो नात्मा प्राक् चोर्ध्वं तदभावतः ॥

पूर्णो देहे बलं यच्छन्नक्षाणां यः प्रवर्तकः ।
वायुः प्राणमयो नासावात्मा चैतन्यवर्जनात् ॥
अहन्तां ममतां देहे गेहादौ च करोति यः ।
कामाद्यवस्थया भ्रान्तो नासावात्मा मनोमयः ॥
लीना सुप्तौ वपुर्बोधे व्याप्नुयादानखाग्रगा ।
चिच्छायोपेतधीर्नात्मा विज्ञानमयशब्दभाक् ॥
काचिदन्तर्मुखा वृत्तिरानन्दप्रतिबिम्बभाक् ।
पुण्यभोगे भोगशान्तौ निद्रारूपेण लीयते ॥
देहादभ्यन्तरः प्राणः प्राणादभ्यन्तरं मनः ।
ततः कर्ता ततो भोक्ता गुहा सेयं परम्परा ॥

பஞ்சகோசமாவன: அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆநந்தமயம் என்பன. இங்கு மயட் என்னும் பிரத்தியயம் (விகுதி) விகாரத்தின் பொருட்டாம். அப்படியே, "பிதாவினால் புசிக்கப்பட்ட அன்னத்தினாலாகிய வீரியத்தினால் உண்டானதாய், அன்னத்தினாலேயே விருத்தியாகின்றதோ, அந்தத் தேகம் அன்னமயமாம். அது (உற்பத்திக்கு) முன்

னும், (நாசத்திற்கு) பின்னும் இன்மையால் ஆத்மா வன்று, தேகத்தில் பூர்ணமாய்ப் பலத்தைக் கொடுத்துக்கொண்டு இந்திரியங்களைப் பிரவிர்த்திக்கச் செய்யும் வாயு பிராணமயமாம். அது சைதன்னியம்(அறிவு) இன்மையால் ஆத்மாவன்று. தேகத்திலும் வீடு முதலிய வற்றிலும் எது யான் எனதெனும் தன்மையைச் செய்கின்றதோ, காமாதியவஸ்தைகளால் மயங்குகின்றதோ அம்மனோமயம் ஆத்மாவன்று. சுழுத்தியில் ஒடுங்கி, ஜாக்கிரத்தில் நகநுனி பரியந்தம் சரீரத்தை எது வியாபிக்கின்றதோ அந்த விஞ்ஞான மயமென்னும் பெயருடைய சிற்சாயையோடு கூடிய புத்தி ஆத்மாவன்று. ஒவ்வொருகாலத்தில் புண்ணியத்தைப் புசிக்கும்போது அந்தர்முகமான விருத்தி ஆனந்தப் பிரதிபிம்பத்தை யடைகின்றது. போகம் (புசிப்பு) ஒழிந்தபோது நித்திரை வடிவமாக ஒடுங்குகின்றது. தேக (அந்நமய)த்தினுள் பிராணன். பிராண(மய)னுள் மனம், அத(மனோமய)னுள் கர்த்தா. அதனுள் (விஞ்ஞானமயனுள்) போக்தா (ஆனந்தமயன் அத்தன்மைய இப்பரம்பரை (ஆத்மாவுக்கு) குகையாம்." என்று சொல்லப்பட்டுள்ளது.

स्थूलशरीरं अन्नमयकोशः । मातृपितृभ्यामन्ने भुक्ते सति शुक्रशोणिताकारेण परिणतं तयोः संयोगादेव देहाकारेण परिणमते । असिकोशवदाच्छादकत्वात् कोश इत्युच्यते । अन्नविकारत्वे सति आत्मानमाच्छादयति । कथम् अपरिच्छिन्नमात्मानं परिच्छिन्नमिव, जन्मादिषड्भावविकाररहितमात्मानं जन्मादिषड्भाववन्तमिव, तापत्रयादिरहितमात्मानं तापत्रयवन्तमिव आच्छादयति ? यथा कोशः खड्गमाच्छादयति, यथा तुषस्तण्डुलमाच्छादयति, यथा वा गर्भं जरायुरावरयति ।

ஸ்தூலசரீரம் அந்நமய கோசம். மாதாபிதாக்களால் உண்ணப்பட்ட அந்நம் சுக்கில சோணித வடிவமாகப் பரிணமித்தது. அவ்விருவரின் சையோகத்திலேயே தேகவடிவமாகப் பரிணமிக்கின்றது. கோசம் போல் மறைப்பதாயிருத்தலின் கோசமெனப்படுவது கோசாகாரப்புழுவின் கூட்டிற்கும், கத்தியின் உறைக்கும், பணப்பொக்கிச முதலியவற்றிற்கும் பெயராம். அவை யெப்படி புழு, கத்தி, பணமுதலிய வற்றை மறைக்

தலால் கோசமெனப்படுகின்றது). அந்த விகாரமாயிருக்குங்கால் ஆத்மாவை மறைக்கின்றது. அபரிச்சின்னமாகிய (தேசகால வஸ்துக்களால் பரிச்சேதமின்றிய) ஆத்மாவை பரிச்சின்னம் போலும், பிறப்புமுதலிய ஷட்பாவ விகாரமுடையது போலும், தாபத்திரய மின்றிய ஆத்மாவைத் தாபத்திரய முடையது போலும். எப்படி மறைக்கின்றது? கோசம் கத்தியை மறைப்பது போலும், உமி அரிசியை மறைப்பதுபோலும், கர்ப்பத்தினைக் கருப்பை மறைப்பது போலும் மறைக்கின்றது.

तथा प्राणमयकोशो नाम कर्मेन्द्रियाणि पञ्च प्राणादिवायवः पञ्च, एतत् सर्वं मिलितं सत् प्राणमयकोश इत्युच्यते। प्राणविकारे सति वक्तृत्वादिरहितमात्मानं वक्तारमिव दानादिरहितमात्मानं दातारमिव, गमनादिरहितमात्मानं गन्तारमिव, क्षुत्पिपासादिरहितमात्मानं क्षुत्पिपासादिमन्तमिवावारयति।

பிராணமயகோசமாவது கர்மேந்திரியங்கள் ஐந்தும் பிராணாதிகள் ஐந்தும் இவ்வெல்லாம் சேர்ந்து பிராணமயகோச மெனப்படும். பிராண விகாரமான

யோது, சொல்லுதற்றன்மை முதலியன வின்றிய ஆத்மாவைச் சொல்லுவது போலும், தானம்(கொடுத்தல்) முதலிய வின்றிய ஆத்மாவைக் கொடுப்பது போலும், நடத்தல் முதலிய வின்றிய ஆத்மாவை நடப்பதுபோலும், பசிதாக முதலிய வின்றிய ஆத்மாவை பசிதாகமுடையது போலும் மறைக்கின்றது.

मनोमयकोशो नाम ज्ञानेन्द्रियाणि पञ्च मनश्च एतत् सर्वं मिलित्वा मनोमयकोश इत्युच्यते। कथं मनोविकारे सति संशयादिरहितमात्मानं संशयवन्तमिव, शोकमोहादि-रहितमात्मानं शोकमोहादिमन्तमिव, दर्शनादिरहितमात्मानं दर्शनादिमन्तमिवावारयति ।

विज्ञानमयकोशो नाम ज्ञानेन्द्रियाणि पञ्च बुद्धिश्च एतत् सर्वं मिलित्वा विज्ञानमयकोश इत्युच्यते। कर्तृत्वभोक्तृत्वाद्य-भिमानेन इहलोकपरलोकगामी व्यावहारिकजीव इत्युच्यते। विज्ञानविकारत्वे सति अकर्तारमात्मानं कर्तारमिव, अविज्ञातारमात्मानं विज्ञातारमिव, निश्चयरहितमात्मानं निश्चयवन्तमिव,जाड्यादिरहितमात्मानं जाड्यादिमन्तमिवावारयति।

மனோ மயகோசமாவது ஞானேந்திரியங்களைந் தும் மனதும் இவ்வெல்லாம் சேர்ந்து மனோமயகோச மெனப்படும். மனோவிகாரமானபோது சம்சயாதி களின்றிய ஆத்மாவை சம்சயமுடையது போலும், சோக மோகாதிகளின்றிய ஆத்மாவை சோகமோகாதி யுடையது போலும், தர்சனாதிகளின்றிய ஆத்மாவை தர்சனாதிகளுடையது போலும் மறைக்கின்றது. விஞ் ஞான மயகோசமாவது ஞானேந்திரியங்கள் ஐந்தும், புத்தியும் இவ்வெல்லாமும் சேர்ந்து விஞ்ஞான மய கோச மெனப்படும். கர்த்திருத்துவ போக்திருத்து வாதி யபிமானத்தால் இகலோக பரலோகங்களுக்குச் செல்வதாய் வியாவகாரிக ஜீவனென்று சொல்லப்படும். விஞ்ஞான விகாரமுள்ளபோது அகர்த்தாவாகிய ஆத் மாவைக் கர்த்தாவைப் போலும், நிச்சயமின்றிய ஆத் மாவை நிச்சயமுடையது போலும், ஜாட்டியாதிகளின் றிய ஆத்மாவை ஜாட்டியாதிகளுடையது போலும் மறைக்கின்றது.

आनन्दमयकोशो नाम प्रियमोदप्रमोदवृत्तिमत् अज्ञान-प्रधानमन्तःकरणम् आनन्दमयकोश इत्युच्यते । कथं प्रि-

यमोदप्रमोदरहितमात्मानं प्रियमोदप्रमोदवन्तमिव, अभोक्तारमात्मानं भोक्तारमिव परिच्छिन्नसुखरहितमात्मानं परिच्छिन्नसुखवन्तमिव आच्छादयति । इष्टपुत्रादिदर्शनजं प्रियम् । प्रियलाभनिमित्तो हर्षो मोदः । स एव च प्रकृष्टो हर्षः प्रमोदः ।

एतेषु कोशेषु मध्ये विज्ञानमयो ज्ञानशक्तिमान् कर्तृरूपः । मनोमय इच्छाशक्तिमान् करणरूपः । प्राणमयः क्रियाशक्तिमान् कार्यरूपः । तत्र हेतुमाह । योग्यत्वादेवमेतेषां विभाग इति वर्णयन्ति ।

एतत् कोशत्रयं मिलितं सूक्ष्मशरीरमित्युच्यते । समष्टिव्यष्टी शास्त्रान्तराद्विशेषतो ज्ञेये ॥

ஆநந்தமயகோசமாவது பிரியமோதப் பிரமோதவிருத்தியுடைய அஞ்ஞானப் பிரதான அந்தக்கரணம் ஆநந்தமயகோசமெனப்படும். எப்படி? பிரியமோதப் பிரமோதமின்றிய ஆத்மாவைப் பிரியமோதப் பிரமோதமுடையது போலும், அபோக்தாவாகிய ஆத்மாவை போக்தாவைப்போலும், பரிச்சின்ன

சுகமின்றிய ஆத்மாவைப் பரிச்சின்ன சுகமுடையது போலும் மறைக்கின்றது. இஷ்டமான புத்திராதிகளைக் காணுகலானுண்டா(கும் விருத்தி) பிரியம். பிரியமானது கிடைத்த நிமித்தத்தாலாய சந்தோஷம் மோதம. அதுவே மிகுந்த சந்தோஷமாய்ப் பிரமோதமாம். இக்கோசங்களுள், விஞ்ஞானமயம் ஞான சக்தியுடைய கர்த்தாவடிவம் மனோமயம் இச்சா சக்தியுடைய கரணரூபம் பிராணமயம் கிரியாசக்தியுடைய காரியரூபம். அதில் ஏதாவை கூறுகின்றார். யோக்கியத்தன்மையினாலேயோ இவற்றின் விபாகமா மென்று வர்ணிக்கின்றார்கள். (பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயமென்னும்) இம்மூன்றுகோசமும் சேர்ந்து சூக்ஷ்மசரீர மென்று சொல்லப்படும். சமஷ்டி வியஷ்டிகள் பிற சாஸ்திரங்களால் விசேஷமாய் அறியத் தக்கனவாம்.

शरीरत्रयविलक्षणत्वमुच्यते कथम् ? सत्यस्वरूपः असत्यस्वरूपो न भवति । असत्यस्वरूपः सत्यस्वरूपो न भवति । ज्ञानस्वरूपः जडस्वरूपो न भवति । जडस्वरूपः ज्ञानस्वरूपो न भवति । एवं सुखस्वरूपो दुःखस्वरूपो न भवति । दुःखस्वरूपः सुखस्वरूपो न भवति ।

*சரீரத்திரய விலக்ஷணத்துவம் சொல்லப்படுகின்றது. எப்படி? சத்தியஸ் வரூபம் (ஆத்மா) அசத்தியஸ்வரூபம் (சரீரத்திரயம்) ஆகாது. அசத்தியஸ்வரூபம் சத்தியஸ்வரூபமாகாது. ஞானஸ்வரூபம் ஜடஸ்வரூபமாகாது. ஜடஸ்வரூபம் ஞானஸ்வரூபமாகாது. இவ்வாறு சுகஸ்வரூபம் துக்கஸ்வரூபமாகாது*

एवं शरीरत्रयविलक्षणत्वमुक्त्वा अवस्थात्रयसाक्षित्वमुच्यते । कथम् ? जाग्रदवस्था जाता, जाग्रदवस्था भवति, जाग्रदवस्था भविष्यति । स्वप्नावस्था जाता, स्वप्नावस्था भवति, स्वप्नावस्था भविष्यति । सुषुप्त्यवस्था जाता, सुषुप्त्यवस्था भवति, सुषुप्त्यवस्था भविष्यति । एवमवस्थात्रयमाविकारतया जानाति ।

अत आत्मनः पञ्चकोशविलक्षणत्वं दृष्टान्तरूपेण प्रतिपादयति । ममेयं गौः, ममायं वत्सः, ममायं कुमारः, ममेयं कुमारी, ममेयं स्त्री, एवमादिपदार्थवान् पुरुषो न भवति । तेभ्यो विलक्षणः । तथा मम अन्नमयकोशः, मम प्राणमयकोशः, मम मनोमयकोशः, मम विज्ञानमयकोशः-

मम आनन्दमयकोशः । एवं पञ्चकोशवानात्मा न भवति । तेभ्यो विलक्षणः साक्षी ।

'अशब्दमस्पर्शमरूपमव्ययं तथाऽरसं नित्यमगन्धवच्च यत् । अनाद्यनन्तं महतः परं ध्रुवं निचाय्य तं मृत्युमुखात् प्रमुच्यते' इत्यादिश्रुतेः ।

இவ்வாறு சரீரத்திரய விலக்ஷணத் தன்மையினைக்கூறி, அவஸ்தாத்திரய சாக்ஷித்துவம் சொல்லப்படுகின்றது, எப்படி? ஜாக்கிராவஸ்தை உண்டாயிற்று. ஜாக்கிராவஸ்தை உண்டாகிறது. ஜாக்கிராவஸ்தை உண்டாகும். சொப்பனவஸ்தை யுண்டாயிற்று. சொப்பனவஸ்தை யுண்டாகின்றது. சொப்பனவஸ்தை யுண்டாகும். சுழுத்தியவஸ்தை யுண்டாயிற்று. சுழுத்தியவஸ்தை யுண்டாகின்றது. சுழுத்தியவஸ்தை யுண்டாகும். இவ்வாறு மூன்றவஸ்தையினையும் விகாரமடையாது அறிகின்றான். இனி ஆத்மாவுக்கு பஞ்சகோச விலக்ஷணத்தன்மையினைத் திருஷ்டாந்த வடிவத்தால் சொல்லுகின்றார்:—என்னுடைய இப்பசு. என்னுடையது இக்கன்று. என்

னுடையவன் இக்குமாரன். என்னுடையவள் இக்குமாரி. என்னுடையவள் இந்தஸ்திரீ என்பதனால் இவை முதலிய பதார்த்தங்களையுடைய புருஷன் (பதார்த்தங்கள்) ஆனான். அவற்றின் வேறானவன். அதுபோல என்னுடையது அந்நமயகோசம், என்னுடையது பிராணமயகோசம், என்னுடையது மனோமயகோசம், என்னுடையது விஞ்ஞானமயகோசம், என்னுடையது ஆநந்தமயகோசம் என்றிவ்வாறு பஞ்சகோசமுடைய ஆத்மா (பஞ்சகோசம்ஆகான்) அவற்றினும் வேறான சாக்ஷியாகின்றான். "எது சப்தமின்றியதும், ஸ்பரிசமின்றியதும், ரூபமின்றியதும், அவ்வியயமும், ரஸமின்றியதும், நித்தியமும், கந்தமின்றியதும், அநாதியும், அநந்தமும், மகத்திற்கு மேலானதும் சாசுவதமுமாயிருக்கின்றதோ அதனை நிச்சயித்து மிருத்தியுமுகத்தினின்றும் விடுபடுகின்றேன்." என்றல் முதலிய சுருதியிருத்தலால்.

इदानीमात्मनः सच्चिदानन्दस्वरूपत्वमुच्यते । सद्रूपत्वं नाम केनाप्यबाध्यमानत्वेन कालत्रयेऽप्येकरूपेण विद्यमानत्वं सद्रूपत्वमित्युच्यते । चिद्रूपत्वं नाम साधनान्तरनिरपेक्ष-

तथा स्वयं प्रकाशमानः सन् स्वस्मिन्नारोपितसर्वपदार्थावभासकवस्तुत्वं चिद्रूपत्वमित्युच्यते। आनन्दस्वरूपं नाम परमप्रेमास्पदत्वं नित्यनिरतिशयत्वमानन्दत्वमित्युच्यते। नित्यविज्ञानमानन्दं ब्रह्म रातेर्दातुः परायणमिति श्रुतेः।

இப்போது ஆத்மாவின் சச்சிதானந்தஸ்வரூபத்துவம் சொல்லப்படுகின்றது. ஸத்ரூபத்துவமாவது எதனாலும் பாதி(பொய்யென்று நிச்சயி)க்கப்படாத் தன்மையால் மூன்றுகாலத்திலும் ஒருவடிவாக இருக்குந்தன்மை. சித்ரூபத்துவமாவது வேறு சாதனங்களையபேக்ஷியாது பிரகாசிப்பதாய்த் தன்னிடத்தாரோபிக்கப்பட்ட சகல பதார்த்தங்களை விளக்கும் வஸ்துவாதல் சித்ரூபத்துவமெனப்படும். ஆநந்தஸ்வரூபமாவது மேலான பிரியத்திற்கு விஷயமாந் தன்மையால் நித்திய நிரதிசயத் தன்மை ஆநந்தத்தன்மை யெனப்படும் "விஞ்ஞான மானந்தம் பிரஹ்மம், செல்வம் கொடுப்பவன் வசத்தது" என்று சுருதியிருத்தலால்.

एवं नित्यशुद्धबुद्धमुक्तस्वभावं। ब्रह्माहमस्मीति संश-

यासंभावनाविपरीतभावनाराहित्येन यस्तु जानाति स जीवन्मुक्तो भवतीति ॥

இவ்வாறு நித்திய சுத்தபுத்த முக்த ஸ்வபாவமான பிரஹ்மம் நானென்று சம்சயா சம்பாவனை விபரீத பாவனைகளின்றிய தன்மையாக எவன் அறிகிறானோ, அவன் ஜீவன்முக்தனாகின்றான் என்க.

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यश्रीमद्गोविन्दभगवत्पूज्यपादशिष्य श्री शङ्कराचार्यविरचितः

आत्मानात्मविवेकः समाप्तः ।

---

இவ்வாறு ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகள்

அருளிச்செய்த

ஆத்மாநாத்ம விவேகம்

முடிந்தது.

---

தஞ்சாவூர் பிரஹ்ம நிஷ்ட பண்டித

ஸ்ரீமான் வே. குப்புஸ்வாமி ராஜு

என்னும் பூர்வாசிரம நாமம் பூண்ட

ஸ்ரீ பிரஹ்மாநந்த ஸ்வாமிகளின் வேதாந்த நூல்கள்.

| | | |
|---|---|---|
| 1 | பஞ்சதசப்பிரகரணம் 2 வாலியும் | 10- 0-0 |
| 2. | ஸ்ரீ விருத்திப் பிரபாகரம் | 5- 0 0 |
| 3. | ஸ்ரீ விசாரசாகரம் | 3- 4-0 |
| 4 | ஸ்ரீ விசாரசந்திரோதயம் | 1- 8-0 |
| 5. | ஸ்ரீ பாலபோதகம் | 1- 8-0 |
| 6. | ,, விருத்தி ரத்நாவலி | 0-12 0 |
| 7 | ராஜஜீவவாதக்கட்டளை குறிப்புரை | 0- 4-0 |
| | ஷை (செய்யுள்) | 0- 3-0 |
| | விவேகசிந்தாமணி | 0- 6-0 |
| | ஸ்ரீ சங்கரநீலகண்டாசார்யசம்வாதம் | 0- 6-0 |
| 11. | ஹடயோகப் பிரதீபிகை | 2- 0-0 |
| 12. | ஸ்ரீ சிவயோகப் பிரதீபிகை | 0-10-0 |
| 13 | அட்டாங்கயோக சூத்திரம் | 0-10-0 |
| 14. | நாரதபக்தி சூத்திரம் | 1- 4-0 |
| 15. | பாணினி வியாகரணம் சூத்திரம் [1-ம் பாகம் | 3- 0-0 |
| 16 | அபரோக்ஷாநுபூதி | 0- 8-0 |
| 17. | ஆத்மபோதமும் தத்துவபோதமும் | 0- 8-0 |
| 18, | ஸ்ரீ புஞ்சிசுரணமுதலியன [27 புத்தகங்கள் | 1- 0-0 |
| 19, | ஸ்ரீ குருபுஜங்க ஸ்தோத்திரம் | 0- 4-0 |
| 20, | ப்ரச்நோத்தர ரத்னமாலை | 0- 2-0 |
| 21, | தருக்கசௌமுதி | 0-10-0 |
| 22. | சிவஞானபோதம் | 1- 8-0 |

| | | |
|---|---|---|
| 23. | ஞானவாசிட்ட வசனம் 1-ம் பாகம் | 1- 4-0 |
| 24. | கைவல்யோபநிடதம், அமிர்தபிந்துபநிடத, சுசரகசியோபநிடதம் ''ஸ்கந்தோப நிடதம் (செய்யுள்) | 0- 5-0 |
| 25. | தத்துவமஸிமகாவாக்கியவுபதேசம் | 0- 3-0 |
| 26. | சுருதி ஷட்லிங்க சங்கிரகம் | 0- 8-0 |
| 27. | ஸ்ரீ நந்திகேஸ்வர காசிகை | 0- 4-0 |
| 28. | உத்திரகீதை | 0- 6-0 |
| 29. | ஸ்ரீ ராமகீதை | 0- 6-0 |
| 30. | ஸ்ரீ கணேச கீதை | 2- 0-0 |
| 31 | யோகதாராவலி | 0- 2-0 |
| 32. | சிவஞானபோதமும் லகுடீகையும் | 0- 2-0 |
| 33. | சர்வஞானோத்தரம் | 0- 4-0 |
| 34 | குருகீதை | 1- 0-0 |
| 35. | தேவீகீதை | 0-12-0 |
| 36. | ஸ்ரீபகவத்கீதை கர்மகீதை, சப்தசுலோககீதை சித்தான பயிண்டு | 1- 4-0 |
| 37. | சிவபஞ்சாக்ஷரவிளக்கம், ஸ்ரீராம மந்திரார்த்தம், ஸ்ரீகணேசஷோட... நாமஸதவம் | 0- 4-0 |
| 38. | ஸ்ரீ...வஷ்ணவ அஷ்டாக்ஷர மந்...திரார்த்த சங்கிரகம் | 0- 2-0 |
| 39. | ஸ்ரீஜகத்குரு ஆதி சங்கராசாரியர் சரித்திரம் (செய்யுள்) | 0- 3-0 |
| 40. | ஷை சரித்திரசங்கிரகம் (வசனம்) | 0 -2-0 |
| 41. | சதாசாரம் | 0 -2-0 |
| 42. | தஞ்சை ஸ்ரீ பிரம்மாநந்தஸ்வாமிகள் திவ்யசரித்திரமும், நான்மணி மாலையும் | 0 -8-0 |

| | | |
|---|---|---|
| 43. | கீதாசாரத்தாலாட்டு | 0- 6-0 |
| 44. | ஸ்ரீ பிரஹ்மவித்தாசீர்வாதபத்ததி | 0- 2-0 |
| 45. | ஸ்ரீ பிரஹ்மநாமாவலி (செய்யுள்) | 0- 2-0 |
| 46. | ஷை நாகரம் கார்டு | 0- 0-6 |
| 47. | ஸ்ரீ சங்கர வித்யாரண்யஷ்டோத்திர சதநாமம், நாகரம், கிரந்தம், தமிழ் தனித்தனி | 0- 2-0 |
| 48. | ஸ்ரீ குர்வஷ்டோத்திர சதநாமாவலி, நாகரம், கிரந்தம், தமிழ் சேர்ந்தது | 0- 3-0 |
| 49. | ஸ்ரீ நாராயணஸ்தோத்திரம்- நாகரம் கார்டு | 0- 0-6 |
| 50. | ஸ்ரீ நாமராமாயணமும், நாராயணஸ்தோத்திரமும், தமிழ் | 0- 1-0 |
| 51. | காயத்ரீராமாயணம் - நாகரி | 0- 1-0 |
| 52. | ஸ்ரீ ராமாயணசூர்ணிகை, நாகரி தமிழ் தனித்தனி | 0- 1-0 |
| 3. | ஸ்ரீ ஜகத்குரு சங்கராசாரியர் படம்பெரிது | 0- 2-0 |
| | ஷை ஷை சிறிது | 0- 1-0 |
| 4. | தஞ்சை ஸ்ரீ பிரஹ்மாநந்தஸ்வாமிகள் படம் பெரிது | 0- 2-0 |
| | ஷை ஷை சிறிது | 0- 1-0 |
| . | ஸ்ரீ சீதாதேவிக்கு ஹநுமார் கணையாளி கொடுத்தபடம். | 0- 1-0 |
| . | ஆத்மாநாத்ம விவேகம் | 0- 4-0 |

சங்கரவிலாச சாரதாமந்திர, புக்டிபோ,
வடக்குராஜவீதி, தஞ்சாவூர்.

# ஜீவந்முக்தி விவேகம்.

(அச்சில்)

ஸ்ரீமத் வித்யாரண்யஸ்வாமிகள் வ
மொழியில் அருளிச்செய்த நூலை தெ
தேசத்தாரும் எளிதில் படித்துணருமா
தஞ்சை ஸ்ரீலஸ்ரீபிரஹ்மாநந்தஸ்வாமிகளா
தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு உயர்
கடிதத்தில் டிம்மி 8 பக்கத்தில் அச்சியற்
யாகிறது. நான்கு ஆச்ரமத்தினரும் தத்
ஆச்ரமத்தின் லக்ஷணங்களை நன்கு உ
ந்து ஜீவந்முக்தியை அடையும் சாதன
களை வியக்தமாய் கூறப்பட்டுள்ளது.

சூ. பாக்கியம் பிள்ளை,

மானேஜிங் டிரஸ்டி,

ஸ்ரீசங்கரவிலாச சாரதாமந்திரம், தஞ்சை.